இல்லை' என்று மீண்டும் 'ரிட்' போட்டிருப்பதாகவும் தெரிகிறது. ஆகையால் இப்போதைக்கு அவசரப்படவேண்டாம் என்ற எண்ணத்தில் இந்தக் காரியம் தாமதப்படுத்தப்பட்டு வருகிறது.

SRI A. GOVINDASAMY : டபில் டெக்கர் பஸ் 'விஜயா' எப்போது பழுதடைந்தது? அது எப்போது ரிப்பேர் செய்யப்படும்? அது 'ரிப்பேர்' செய்யப்படுமா அல்லது 'கண்டெம்' செய்யப்படுமா?

THE HON. SRI R. VENKATARAMAN : இதிலிருந்து, கனம் அங்கத்தினருக்கு விஜயாவிடத்தில் அதிக அன்பு இருப்பதாகத் தெரிகிறது. (சிரிப்பு).

*Separate Agricultural division for Villupuram*

* 310 Q.—SRI A. GOVINDASAMY : Will the Hon. the Minister for Home be pleased to state—

(a) whether a separate Agricultural division has been created for Villupuram ; and

(b) the number of tractors and oil-engines allotted to the division?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) Yes, Sir.

(b) There is no separate allocation of tractors and oil engines for each division. There are 14 tractors and 37 oil engines in South Arcot district which are stationed at Cuddalore and diverted for work in the entire district including this division according to demand.

SRI A. GOVINDASAMY : தென்னாற்காடு ஜில்லாவில் விவசாய இலாகாவை இரண்டாகப் பிரித்துவிட்டு விழுப்புரத்திற்குத் தேவையான டிராக்டர்களையும் எஞ்ஜின்களையும் கடலூரில் வைத்திருப்பதில் என்ன அர்த்தம்? விழுப்புரத்திற்குத் தேவையான டிராக்டர்களையும் எஞ்ஜின்களையும் விழுப்புரத்திற்கே மாற்ற அரசாங்கம் யோசிக்குமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : மற்ற வேலைகளை கவனிப்பதற்காகத்தான் இந்த மாவட்டம் இரண்டாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. எஞ்ஜினியரிங் வேலையைப் பொறுத்தவரையில் அந்த மாவட்டத்திற்கு ஒரு எஞ்ஜினியர்தான் இருக்கிறார். அங்கே டிராக்டர்களும் புல்டோஸர்களும் குறைவாக இருக்கின்றன. ஆகவே, அவைகளையெல்லாம் ஒரே இடத்தில் வைத்திருந்து எங்கெங்கெல்லாம் வேண்டுமோ அங்கெல்லாம் கொடுப்பது தான் உசிதம் என்று கருதி, அவ்வாறே செய்வதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

*Trade union workers*

* 311 Q.—SRI M. KALYANASUNDARAM : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(a) whether there is any proposal to bring in suitable legislation for giving protection to trade union workers against victimisation ; and

(b) what are the features of the proposed Bill?

THE HON. SRI R. VENKATARAMAN : (a) No, Sir.

(b) Does not arise.

[13th February 1959

**Sri M. KALYANASUNDARAM**: சென்னை உயர்நீதி மன்றத்தால் சமீபத்தில் அளிக்கப்பட்ட ஒரு தீர்ப்பில் எந்தத் தொழிலாளர்களையும் ஸ்டாண்டிங் ஆர்டர்ப்படி வேலையிலிருந்து நீக்குவதற்குரிய உரிமை முதலாளிகளுக்கு உண்டு என்றும் அதை விசாரணைக்கு விடுவதற்கு சர்க்காருக்கு உரிமை கிடையாது என்றும் கூறப்பட்டிருக்கிறது. இந்த நிலைமையில், தொழிற் சங்கங்களைப் பழிவாங்கும் நோக்கத்துடன் முதலாளிகள் நூற்றுக்கணக்கான தொழிலாளர்களை வண்டலூர் மோட்டார் வர்க்ஸில் டிஸ்மிஸ் செய்திருப்பதைப் போல டிஸ்மிஸ் செய்யும்போது, அங்கே தலையிடுவதற்கு சர்க்காருக்கு சந்தர்ப்பம் இல்லாது போய்விட்டது. எனவே, இந்தக் குறையைப் போக்குவதற்காக சட்டத்தைத் திருத்தும் நோக்கம் சர்க்காருக்கு உண்டா ?

**The Hon. Sri R. VENKATARAMAN**: இந்த விஷயம் தற்போது அரசாங்கத்தின் ஆலோசனையில் இருந்துவருகிறது.

**Sri N. K. PALANISAMI**: ஒரு ட்ரிப்யூனல் " அவார்ட் " கொடுத்தால், அதற்கெதிராக பல ரிட்கள் கோர்ட்களில் போடப்பட்டு, அந்த அவார்டிற்கு எதிரான தீர்ப்பு கோர்ட்டுகளால் கொடுக்கப்படுகிறது. எனவே, ஒவ்வொரு கோர்ட்டையும், தொழிலாளர்களுக்கு என்னென்ன சட்டங்கள் இருக்கின்றன என்று பரிசிலித்து அந்த அடிப்படையில் தீர்ப்பளிக்கச் செய்ய சர்க்கார் நடவடிக்கை எடுப்பார்களா ?

**The Hon. Sri R. VENKATARAMAN**: ஹைக்கோர்ட்டு சட்டப்படிதான் தீர்ப்புக் கொடுக்கிறது.

**Sri M. KALYANASUNDARAM**: நான் என்னுடைய முந்தைய உப கேள்வியில் குறிப்பிட்ட விஷயம் பரிசீலனையில் இருக்கும் அதே சமயத்தில், இனி இம்மாதிரியான தகராறுகளை அட்ஜுடிகேஷனுக்கு விடுவதில்லை என்பது சர்க்காரின் கொள்கையாக இருக்கிறதா, அல்லது இனிமேல் இவைகள் அட்ஜுடிகேஷனுக்கு விடப்படுமா ?

**The Hon. Sri R. VENKATARAMAN**: ஹைக்கோர்ட்டின் தீரப்பிற்கு உட்பட்ட ஹைக்கோர்ட்டின் தீர்ப்பைப்பெற்ற எந்த விஷயத்தையும் மறுபடியும் ட்ரிப்யூனலுக்கு விடமுடியாது. ஏனென்றால், அவ்வாறு ஒரு விஷயத்தை மறுபடியும் டிரிப்யூனலுக்கு விட்டு ட்ரிப்யூனலின் தீர்ப்பைப் பெற்றால், அந்தத் தீர்ப்பு ஹைக்கோர்ட்டின் தீர்ப்பிற்கு மாறாக இருக்கிறது என்று " ஸ்டே " வாங்கிவிட முடியும். அதை ட்ரிப்யூனலுக்கு விட்டாலும், ஹைக்கோர்ட் தீர்ப்பிற்கு மாறாக ட்ரிப்யூனல் தீர்ப்பு கொடுக்க முடியாது. எனவே, ஹைக்கோர்ட்டின் தீர்ப்பைப் பெற்ற எந்த விஷயத்தையும் ட்ரிப்யூனலுக்கு விட முடியாது என்று சர்க்கார் கருதுகிறது.

**Sri M. KALYANASUNDARAM**: தொழில் அமைதி ஏற்படவேண்டும் என்றும், பழிவாங்குதலைத் தடுக்க வேண்டும் என்றும் சர்க்கார் விரும்பினாலும்கூட, இப்போதுள்ள ஹைக்கோர்ட் தீர்ப்பின்படி, தொழிலாளர்களை சர்க்கார் பாதுகாக்க முடியாத நிலைமை இருக்கிறது. இந்த நிலைமையில், தொழிலாளர்கள் தங்களைப் பாதுகாத்துக் கொள்வதற்காகப் போராட்டம் நடத்தும்போது போலீஸை அனுப்பி அவர்களை அடிக்காமலிருக்கும்படி கனம் போலிஸ் அமைச்சரிடம் கனம் தொழில் அமைச்சர் சிபாரிசு செய்வாரா ?

**The Hon. Sri R. VENKATARAMAN**: இந்த விஷயத்தில் சர்க்காரின் கொள்கை நன்றாக விளக்கப்பட்டிருக்கிறது. சட்டப்படி நடப்பவர்கள் யாரையும் போலீஸ்காரர்கள் அடிக்கமாட்டார்கள்.

### *Tank improvement works*

**Mr. SPEAKER**: The hon. Member Sri K. Sattanatha Karayalar is not in his seat. The question and answer will be printed in the official proceedings.